The series was first started in 1951 at Mambakkam, but for some reasons, had to be stopped. Srimathi Minakshi Kalyanasundaram has now made arrangements to revive the series and has published the second edition of the first and second Tirumurais.

The first Tirumurai consists of Tiruppugazhs on Tirupparangunram and the second on Tiruchendur, The text is printed on one page and word for word meaning in Pozhipurai is given on the opposite page Short notes on difficult words are also provided. It is to be hoped that the whole series will be published within the time envisaged.

* * * *

## "சுதேசமித்திரன்" 8-5-1953.

முருகவேள் பன்னிருதிருமுறை :— தொகுதி-1, பகுதி-1. பதவுரை, பொழிப்புரை, குறிப்புரைகளோடு கூடியது. உரையாசிரியர்: ஸ்ரீ வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம்.ஏ., கிடைக்குமிடம்: ஸ்ரீமதி மீனாட்சி கலியாணசுந்தரம், நெ. 2, 2-ஆவது தெரு, வடக்குக் கோபாலபுரம், சென்னை-6.

ஸ்ரீமான் செங்கல்வராயப் பிள்ளை அவர்களும் அவருடைய தந்தையார் உயர்திரு ஸ்ரீ சுப்ரமண்ய பிள்ளை அவர்களும் முருகன் அடியார் பரம்பரையில் உதித்தவர்கள். தந்தையார் 1892-ஆம் ஆண்டு முதல் பல ஆண்டுகள் பாடுபட்டு ஆராய்ந்து திருப்புகழையும் முருகன் நூல்கள் வேறு பலவற்றையும் பிழையறப் பரிசோதித்துப் பதிப்பித்தவர்கள். இப்பொழுது அவருடைய குமாரர் ஸ்ரீ அருணகிரி சுவாமிகள் அருளிச் செய்த நூல்களை அனைத்தையும் பல வால்யூம்களாக விரிவான உரையுடன் பதிப்பிக்க முன்வந்துள்ளார். அந்த வரிசையில் இது முதற் புத்தகம். பிரதி மாதம் 96-பக்கங்களில் ஒவ்வொரு புத்தகமும் ரூ. 1 விலையுடன் வெளிவரும் என்று புத்தக விளம்பரம் கூறுகிறது. இந்தப் பதிப்பில் திருப்புகழைப் பற்றிய பாராட்டுக் கவிகள், நூற்பயன் உள்ளிட்ட பாயிரம், நூலின் முற்பகுதி என்பவை 96-பக்கங்களில் தரப்பெற்றுள்ளன. உரை மிகவும் தெளிவாக அமைந்துள்ளது. முருகனடியார்க்கு இந்தப் புத்தக வரிசை அருணகிரியாரின் நூல்களைப் பொருளுடன் உணரப் பேருதவியாக இருக்கும்.

---

## "கல்கி" 8-3-1953.

சந்த இன்பமும், ஓசை நயமும், பொருள் ஆழமும் கொண்டு பாடும் நாவெல்லாம் தித்திக்கும் வண்ணம் அழகாக அமைந்திருப்பது அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ். அந்த அற்புதத் தீந்தமிழ் நூலுக்கு உரை எழுதியிருக்கிறார் தணிகைமணி ஸ்ரீ. வ. சு. செங்கல்வராயப் பிள்ளை. விரிவான ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் உரை தெளிவாய் அமைந்திருக்கிறது. எல்லாத் திருப்புகழ்ப் பாடல்களுக்கும் உரையெழுதிய பிறகு நூலை வெளியிடுவ தென்றால் மிகவும் கால தாமதம் ஆகும். ஆகவே, பகுதிக ளாகப் பிரித்துக்கொண்டு வெளியிடும் முயற்சியை மேற் கொண்டுள்ளனர். முருகனடியார்கள் படித்துப் பாடி இன்புறலாம்.

"அமிர்தவசனி" (மார்ச் — ஏப்ரல் 1953 திருப்புகழ் உரை

பலகாலமாக முயன்று ஏட்டுச் சுவடிகளைத் தேடித் தொகுத்து ஸ்ரீ அருணகிரிநாதர் திருப்புகழை வெளியிட்ட பெருமை, ஸ்ரீ செங்கல்வராயப் பிள்ளை அவர்கள் குடும்பத் திற்கு உரியது. அவர்கள் இன்று சந்தமணம் கொழிக்கும் செந்தமிழத் திருப்புகழ்க்கு உரையெழுதும் முயற்சியில் ஈடுபட்டிருக்கின்றார்கள். காலப் போக்கிற்குத் தக்கபடி மனம் போக்கி எழுதுவோர் போலன்றி, பழமை பற்றும் பண்புடைய அன்பர் அறிஞர் தணிகைமணி உரை ஆசிரியராக அமைந்தமை பாராட்டத் தகும். அச்சிடும் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கும் பிரமஸ்ரீ மீனாட்சி கலியாணசுந்தரம் ஐயரவர்கள் முயற்சி தமிழர் ஒவ்வொரு வரும் போற்றுவதற்கு உரியது. நம் மதிப்பிற்குரிய உரை ஆசிரியரும், பதிப்பாசிரியரும ஏற்றுக் கொண்டிருக்கும் பொறுப்பு மகத்தானது. பெருமபொருட் செலவில் இது ஆரம்பமாகி உளது. பொருள் உணர்ந்து ஓதுதல் பெரும் பயனுமாதலின், முருகன் அடியவர்கள் இந்த நல்ல சந்தர்ப் பத்தைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டுகின்றோம். * *

### திராவிடக் கவிமணி வே. முத்துசாமி ஐயர், M.A.L.T., உவந்து அளித்த பாராட்டுரை.

திருப்புகழை விருப்புமிக ஆய்ந்துமுத லச்சேற்றிச் செப்பஞ் செய்தே
பருப்புகழ்சார் தனிசுப்ர மணியபிள்ளை தவப்புதல்வ பரிதி மாற்கோ
குருப்புகழ சர்வகலா சங்கப்பொற் பரிசிரண்டுங் கொண்டா யன்னாள்
கருப்புகழை நவிந்து செவ்வேள் கழல்பாடும் பாமணமே சமழும்
வாயாய்! (1)

வரகுகன்பேர் சுப்ரமணியன் சண்முகனே ஆறுமுகன் வையம் உய்வு
பெருகருள்செய் வச்சேனு பதிதணிகை மயிலேறும் பெருமா னாதி
வருகுடும்ப மணிதணிகை மணிசெங்கல்வராயஅண்ணல்! மரபுக்கேற்ப
முருகவேள் பன்னிரண்டு திருமுறைகள் வகுத்துரையும்
மொழிந்தாய் · அம்மா! (2)

பொன்னிருப.ற் பிறங்குமணி நீலமணி மிசைநிலவும் பொலிவார்
தன்னிருதாட் கடிமைசெய்வாய்! திருப்புகழேமுதலாச்சீர் [கந்தன
சார்நூல் தம்மைப்
பன்னிருபேர்த் திருமுறையா வகுத்திரையும்
வகுத்தச்சிற் பதிப்பித் திட்டாய்
என்னிருகண் மணியனையாய் இசையினியாய்
தமிழ்ச்செவ்வி இயல்வல் லோயே! (3)
அணிகைமணி அக்கமும்வெண் ணீறுதிகழ் அங்கமும்மெய்
அன்பும் மேவும்
தணிகைமணி இராவ் பகதூர் செங்கல்வ ராய அன்ப!
தணிகேசர் தாள்
பணிகைமணி நேரமருப் பண்பார்நண்பா! தாதை பதிப்புச் செய்சீர்
திணிகைமணி திருப்புகழ்க்கின் னுரைவகுத்தாய்
இருல் வடித்த தேனே போன்றே! (4)
சைவத்திற் பதிமனத்தாய்! தமிழினிடை தவழ்நாவாய்!
தணிகைத் தொண்டே
மெய்வைத்த உயிர்மெய்யாய்! தேவாரத் திருமுறையா மேதி னிக்கே
உய்வைத்தந் தருள்பனுவற் கொளிநெறியா நீவரைகட்
டுரைபோல் நின்பொற்
கைவைத்த திருப்புகழிவ் வுரைப்பணியு நனிமுற்றக் காண்பாய்
ஐயா! (5)
அருணகிரி யார்சந்தப் பாக்கேட்போர் செவிக்கினிமை ஆரத்துய்ப்பர்
மருணகர நின்னுரையால் மனத்தின்[illegible] அவ் ஆர்வர்;
மயற்போர் மல்கும்
இருணகரி யெலாமுருக னருளமைதி இயக்கமுறும்;
இதுபோல் நின்செந்
தருணகர மலர்நீடு பணிபுரிந்து வாழ்விக்க தாணி மாதோ! (6)
அன்புமிகு வாகீச கலாநிதிகி வா.ஜகந்நா தையர் உள்ளத்
தின்புமதிப் புறவிரவ இசைத்திடுபா யிரப்பாக்கள் எழுத்தி லக்கம்
பொன்பெறும் அப் பாராட்டிற் படிந்துமகிழ் பொங்கிமனம்
பூரித் தார்த்தேன்
என்பிரிய முளநண்பா! இறையருளால் இரும்புகழுற் றினிதுவாழி. (7

வாழி தமிழ்க்கடல் வாழி திருப்புகழ்
வாழி முருகன் வளர்கருணை—வாழியென்றும்
பொங்கு திருப்புகழ்க்குப் பொன்போ லுரைவகுத்த
செங்கல்வ ராயவேள் சீர். (8)

மாட்சிமிகு நூலொடுரை மாதமொரு புத்தகமாக்
காட்சியுவாப் போந்து கன அச்சில்—ஆட்சிகொளக்
கண்ட அன்பர் மீனாட்சி கல்யாண சுந்தரர்கள்
மண்டுமின்ப வாழ்வுறுக மன். (9)

இம்முருக வேள்பன் னிரண்டு திருமுறையும்
செம்மை யுரையுமொரு சேர அச்சில்—எம்மையாள்
கந்தனரு ளாற்பதிக்கும் மீனாட்சி கல்யாண
சுந்தரர்கள் வாழி சுபம். (10)

